Regd: No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People MADRAS Phone: 420212 4 பக்கம் விலை ௭
POST WITHOUT PRE-PAYMENT LICENCE No: G-6 TN-MS (C)P. P. 55

**நீதிமன்றம்**

நீதி மன்றத்தின் தீர்ப்புகளுக்கு நாம் தலைவணங்கியாக வேண்டும். ஆனால் கடைசி நீதிமன்றம் மக்கள் தான்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**முதிர்ச்சி**

நாடு முன்னேறுகின்ற சூழ்நிலையில் ஒரு நாட்டு மக்கள் நாகரிகம் முதிர்ச்சி அடைந்தால் சோஷலிச வரம்புக்குள் இருக்க வேண்டும்.

-புரட்சித்தலைவர்

மலர் 12 சென்னை 5-3-1988 சனி வெளியூர் 6-3-1988 ஞாயிறு இதழ் 138

## ஃ காங்கிரஸ் யோக்கியர்களின் வேடம் கலைகிறது!

## ஃ கோடிப்பணம் - காங்கிரசுக்கு அது சர்வசாதாரணம்

### மீண்டும் ஜனாதிபதி தேர்தலில் போட்டியிடுவதற்கு யார் பேரம்? எவ்வளவு பேரம்?

# காங்கிரசாரின் ரூ.40 கோடி: ஜைல்சிங் அம்பலப்படுத்துகிறார்

## நாட்டுக்கே சட்டாம் பிள்ளைத்தனம் பேசும் மத்திய அரசே, உன் நடவடிக்கை என்ன?

"பிணம் விழுந்தால் வெட்டியானுக்குக் கொண்டாட்டம்"

அடிப்பாவி..! பணந்தர்றேன் என்று கூட்டிப்போய் இளந் தளிரை கொன்னுட்டு உனக்குப் பேச்சு ஒரு கேடா?

புதுடெல்லி, மார்ச் 5- மீண்டும் ஜனாதிபதி தேர்தலில் தாம் போட்டியிட ரூபாய் 30 கோடிமுதல் 40 கோடிவரை செலவிட முன் வந்தது யார்என்பதைமுன்னாள் ஜனாதிபதிஜைல்சிங் அம்பலப்படுத்தினார். அந்த நபர்கள் காங்கிரசில்தான் உள்ளனர் என்றும் ஜைல்சிங் அறிவித்தார்.

கடந்த ஆண்டு ஜுன் மாதம் ஜனாதிபதி தேர்தல் நடந்த போது ஜைல்சிங்கை மீண்டும் போட்டியிடுமாறு சில எதிர்க்கட்சிகள் வற்புறுத்தின.

ஆனால் கடைசி வரை ஜைல்சிங் மவுனமாகவே இருந்தார்.

ஆர். வெங்கட்ராமன் போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

சமீபத்தில் ஒரு பத்திரிகைக்கு ஜைல்சிங் பேட்டி அளித்த போது "என்னை ஜனாதிபதி தேர் தலில் மீண்டும் நிறுத்தி வெற்றி பெறச் செய்ய ரூபாய் 40 கோடி வரை செலவிட சிலர் முன் வந்தனர் ஆனால் நான் மறுத்து விட்டேன் என்று குறிப்பிட்டிருந்தார்.

### எதிர்க்கட்சி குற்றச்சாட்டு

இந்த விவகாரத்தில் தற்போதைய அமைச்சர்கள் சிலருக்கும் பொறுப்பு உண்டு என்று ஜைல்சிங் குறிப்பாக உணர்த்தி உள்ளதாக ஜனதாத்தலைவர் மது தண்டவதே அம்பலப்படுத்தினார்.

அதற்கு பிரதமர் பதிலளிக்கும் போது "ஜைல்சிங் சொல்கிற மாதிரி ஆட்கள் எவரும் எங்களிடம் இல்லை' என்று பதிலளித்திருந்தா

இந்த விவகாரம் பற்றி விசாரணைக்கு உத்தரவிட்டிருப்பதாகவும் பிரதமர்ராஜீவ் கூறியிருந்தார்.

### ஜைல்சிங் அறிவிப்பு

முன்னாள் ஜனாதிபதி ஜைல்சிங்கை நிருபர்கள் பேட்டி கண்டனர்.

மீண்டும் ஜனாதிபதி தேர் தலில் நில்லுங்கள் 30 கோடி முதல் 40 கோடி ரூபாய் வரை செலவு செய்கிறோம் என்று கூறியவர்கள் இன்னமும் இ காங்கிரசில் தான் உள்ளனர் என்று ஜைல்சிங் கூறினார்.

அவர்கள் மத்திய அமைச்சரவையில் உள்ளனரா என்கிற விவரத்தை அவர் கூறவில்லை.

### வாழ்க்கை சினிமா

ஜைல்சிங் வாழ்க்கைப்படம் ஒன்றை ஒருவர் தயாரிக்கிறார் அதற்கான குறிப்புகளை எழுதிக்கொண்டு வந்தார் மீண்டும் ஜனாதிபதி தேர்தலில் போட்டியிட ஜைல்சிங்குக்காக ரூபாய் 40 கோடி வரை செலவிட தயாராக இருந்தார்கள் என்ற குறிப்பு அதில் வருகிறது.

அந்த குறிப்பு திரைப்படத்தில் வரவேண்டாம் என்று ஜைல்சிங் அதை அடித்து விட்டார்.

### அன்னைக்கு பாரதீஸ்வரர் ஆலய பிரசாதம்

சென்னை. மார்ச் 5 அன்னை ஜானகி எம் ஜி ஆர் வடபழனியில் நடைபெற்ற மணவிழாவுக்கு வந்த போது அருள்மிகு பாரதீஸ்வரர் மற்றும் திருவீதியம்மன் கோவில் பிரசாதங்களை ஆலயத்தின் தக்காரும் கழகத் தோழருமான என் சந்திர சேகரராஜா வழங்கினார்.

### மதுரை: 21 லட்சம் வாக்காளர்கள்

மதுரை மார்ச். 5- மதுரை மாவட்டத்தில் உள்ள 15 தொகுதிகளில் 21 லட்சத்து 57 ஆயிரத்து 880 வாக்காளர்கள் உள்ளனர் என்று மதுரை மாவட்ட ஆட்சித் தலைவர், மா. தேவராஜ் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறினார்

## உறுதி ஏற்போம்!

தந்தை பெரியார், அண்ணா வழியில் நடந்தவரே!

இதயதெய்வம் புரட்சித்தலைவர் தனிக் கழகம் கண்டபோது தோள் கொடுத்த உத்தமரே!

"தமிழகம் இன்றும் - என்றும் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆரை ஏற்றிப் போற்றும்- ராமாவரம் தோட்டத்தையே தமிழகம் என்றும் ஏற்கும்" என்று அன்றே முழக்கமிட்ட அறிவுச்சுடரே!

துரோகத்தை முறியடிப்பேன் என அன்றைக்கே சூளுரைத்த தூயவரே!

இன்றும் வந்துள்ள துரோகத்தை வீழ்த்தி அன்னையார் தலைமையில் புரட்சித் தலைவர் நல்லாட்சி தொடர்ந்திட உன் நினைவு நாளில உ்மை வணங்கி உறுதி ஏற்கிறோம்!

அன்னையார் முன்பு

## கழகத்தில் இணைந்த தி. மு. க., காங்கிரஸ் முக்கிய பிரமுகர்கள்

சென்னை, மார்ச். 5. கழகத் தலைவர் அன்னை ஜானகி எம். ஜி. ஆர். தலைமையில் பொதுச் செயலாளர் (பொறுப்பு) ராகவானந்தம் ஆர்.எம்.வீ. கொள்கை பரப்புச் செயலாளர் முத்துசாமி ஆகியோர் முன்னிலையில் தென் ஆற்காடு மாவட்டம் ஆதிவராகநல்லூர் திமுக கிளை செயலாளர் ஏ பி கலியுபெருமாள் நெய்வேலி ஊத்தங்கால் காங்கிரஸ்தலைவர் பி, மாதவ ரெட்டி ஆகியோர் கழகத்தில் இணைந்தனர் அப்போது தென்ஆற்காடு மாவட்ட ஆய்வுக்குழு உறுப்பினர் பூமாலை சண்முகம் ஆதிவராக நல்லூர் கழக செயலாளர் ராதாகிருஷ்ணன் ஆகியோர் உடன் இருந்தனர்.

## இலங்கையில் 14-ம் நாள் உண்ணாவிரதம்: அன்னம்மா உடல்நிலை கவலைக்கிடம்

கொழும்பு,மார்ச்.5. இலங்கையில் போர் நிறுத்தம் கோரி மட்டக் களப்பில் கடந்த 14 நாட்களாக உண்ணாவிரதம்இருந்துவரும் அன்னம்மா டேவிட்டின் உடல்நிலை கவலைக்கிடமாக இருக்கிறது

இதனைத் தொடர்ந்து அன்னம்மா டேவிட் உண்ணாவிரதம் இருக்கும் பிள்ளையார் கோவிலில்ஏராளமான மாணவர்களும் பொது மக்களும் கூடியிருந்தனர் 14 நாட்களாக உணவின்றி கவலைக் கிடமான நிலையில் அன்னம்மாள் சோர்ந்து கிடக்கிறார்.

இலங்கையின் கிழக்கு மட்டக் களப்பு பகுதியில் ஐந்துக்கும் மேற்பட்டவர்கள் கூடக்கூடாது என்று இந்திய அமைதிப் படை தடையுத்தரவைப் போட்டுள்ளது.

ஈழப் புரட்சி இயக்கம் நேற்று ஆர்ப்பாட்டம் நடத்துவதாக இருந்தது அதனை தடுக்கும் வகையில் இந்த தடைஉத்தரவு பிறப்பிக்கப் பட்டுள்ளது.

இந்திய-இலங்கை ஒப்பந்தத்தை அமல்படுத்தவேண்டும் சிங்கள அரசியல் கைதிகள் உள்பட அனைத்து அரசியல் கைதிகளும் விடுதலை செய்யப்படவேண்டும் என்ற கோரிக்கையை வலியுறுத்த ஆர்ப்பாட்டம் நடத்தப் போவதாக இந்த இயக்கம் அறிவித்திருந்தது.

ஒலி பெருக்கி பொருத்தப் பட்ட இந்திய அமைதிப்படை தடைஉத்தரவுசெய்தியை நகரெங்கும் அறிவித்துள்ளன.

மகளா...! பரிதாபம்...?!

## ஆதிபராசக்தியே அவரை மன்னித்துவிடு

"ஜெயலலிதாவை நான் மகளாகவே நினைக்கிறேன்."

நாவலர் பேச்சு

மாலைமலர் - சென்னைப்பதிப்பு 4-3-88.

நாவலரே - தமிழகம் உங்களுக்காகப் பரிதாபப்படுகிறது. நீங்கள் "ஜெயா"வை மகளாக ஏற்பதாய் பாசாங்கு செய்யலாம்.

மேல்மருவத்தூர் ஆதிபராசக்தியை அனுதினமும் தொழும் விசாலாட்சி நெடுஞ்செழியனின் வயிற்றில் இப்படி ஒரு மகள் பிறக்க மாட்டாள்! பிறக்க மாட்டாள்!

-கா

## பெரம்பூரில் ஜேப்பியார் கொடியேற்றுகிறார்

சென்னை, மார்ச் 5

பெரம்பூர் தொகுதி25வது வட்டம் நெல்வயல் நகரில் நாளை [6ந் தேதி] காலை 10 மணிக்கு கழகக் கொடி யேற்றுவிழாநடைபெறுகிறது சென்னை மாவட்ட கழகச் செயலாளர் ஜேப்பியார் கழகக் கொடியேற்றி சிறப்புரை ஆற்றுகிறார்.

ராஜிதலைமை வகிக்கிறார் வேலாயுதம் செல்வராஜ் முன்னிலை வகிக்க ரங்கநாதன் விஜி வரவேற்கின்றனர் நிகழ்ச்சியில்திரைப்பட நடிகர் குண்டு கல்யாணம் தரங்கை கண்ணன் ஓம் பொடி பிரசாத் ஜெயபால் ராஜாராம் உதய குமார் மனோகரன் ஜெயபிரகாசம் துரைராஜ சாம்நாதன் சுந்தரம் தமிழரசன் அருள் தேவராஜி பொன்னுசாமி தீனன் மற்றும் பலா கலந்து கொள்கிறார.

## தம்பதிகட்கு அன்னையார் வாழ்த்து

சென்னை, மார்ச். 5-

சென்னை 27 வது வட்ட எம்.ஜி.ஆர் மன்ற செயலாளர் ரமணா நகர் சேகரின் தம்பி வெற்றிவேந்தனுக்கும் புவனேஸ்வரிக்கும் முன்னாள் அமைச்சர் அனூர்ஜெகதீசன் தலைமையில் திருமணம் நடைபெற்றது. மணவிழாவில் மாவட்டச் செயலாளர் ஜேப்பியார் ஆர். டி.சீதாபதி, ஓம்பொடி பிரசாத், ஆ. ராஜாராம், வி. எஸ். சண்முகம், அருள் மணி, ஜெயபிரகாசம். அன்புமணி, கன்னையன் ரமணா நகர் பன்னீர் ஆகியோர் பங்கேற்றுவாழ்த்தினர் மோகன் நன்றி கூறினார்.

மணமக்கள் பின்னர் அன்னை ஜானகி எம்.ஜி. ஆரை சந்தித்து வாழ்த்துப் பெற்றனர்.

## கழகத்தின் இதயத் துடிப்பாய் விளங்கும் காளிமுத்து மீது கை வைத்துப் பார்!

# அண்ணா பிறந்த மண்: கழக முன்னணியினர் ஆவேசம்கோபம் குமுறல்

காஞ்சிபுரம், மார்ச். 5-

கழகத்தின் இதய துடிப்பாய் விளங்கும் அண்ணன் காளிமுத்துவை சதி செய்து கைது செய்ய நினைத்தால் தமிழகம் எரிமலையாகும் சிங்கமென சீறியெழுவோம் இருப்பது ஓர் உயிர் அது புரட்சித் தலைவரின் லட்சியத்தை காக்க தேவையென்றால் அதை தந்தும் கழகத்தை காப்போம் என கழக முன்னணியினர் ஆவேச முழக்கமிட்டனர்.

அண்ணன் பிறந்த காஞ்சி மண்ணில் கழக துணைப் பொதுச்செயலாளர் டாக்டர் காளிமுத்துபங்கேற்று பேசிய பிருமாண்டமான கழகக் கூட்டம் நடைபெற்றது.

இந்தக் கூட்டத்தில் முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் சி,என். விஸ்வநாதன்முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் காஞ்சி பாலாஜி நிலக்கோட்டை பாலுச்சாமிதண்டராம்பட்டு வேலுமற்றும் கழகமுன்னணியினர்பலா பங்கேற்றுப் பேசினர்.

இந்தக் கூட்டத்தில் பேசிய ஒவ்வொருவரும் மத்திய அரசு சதிசெய்து கழக துணைப் பொதுசெயலாளர் காளிமுத்துவை கைது செய்தால் எந்தத் தியாகம் செய்தாவது என்ன விலை தந்தாவது அதை தடுத்து நிறுத்துவோம் என்று ஆவேசத்துடன்' குமுறலுடன் பேசினர்.

காஞ்சி பாலாஜி, நிலக்கோட்டை பாலுச்சாமி, தண்டராம்பட்டுவேலு ஆகியோர் உணர்ச்சி மிகுதியால் கண்கலங்கினர். கழகத்தின் இதய துடிப்பாய் இருக்கும் அண்ணன் காளிமுத்து மீது சதிசெய்துகை வைக்க முயன்றால்என்னவிலை தந்தேனும் ஏன் எங்கள் உயிரைத் தந்தேனும் தடுத்து நிறுத்துவோம் என்று உணர்ச்சி முழக்கமிட்டனர்.

கழக முன்னணியினரின் உணர்ச்சி கண்டு பொது மக்களும் ஆவேசம் கொண்டு அநியாயத்தை முறியடிக்க சபதம் எடுத்தனர்.

## கழகத் தோழர்கள் தந்த நிதி

காஞ்சிபுரத்தில் நடைபெற்ற கழகக் கூட்டத்தில் இரட்டைமங்கலம் பஞ்சாயத்து தலைவர் ராதாகிருஷ்ணன் கழக வளர்ச்சி நிதியாக 102 ரூபாயை கழக துணைப் பொதுச் செயலாளர்காளிமுத்துவிடம் வழங்கினார் வட்ட பிரதிநிதி மோகனசுந்தரம் 25 ரூபாயும் முதுகுளத்தூர் கழக சார்பில் 20 ரூபாயும் நிதியாக வழங்கப்பட்டது

## மூன்றாவது ஆலோசகர் பதவி ஏற்பு

சென்னை, மார்ச் 5-

தமிழ்நாடு ஆளுநரின் மூன்றாவது ஆலோசகராக நியமிக்கப்பட்ட ஜி. வி. ராமகிருஷ்ணா இன்று பதவி ஏற்றார்.

பின்னர் ஆளுநரையும் அவர் சந்தித்தார்.

## நாட்குறிப்பு

### கொமார பாளையம்

நாள்: 6-3-88 ஞாயிறு மாலை 7மணி இடம் சேலம் மெயின்ரோடு கொமார பாளையம். தலைமை கே. நாகராஜன் வரவேற்பு:- வி சண்முகசந்தரம் முன்னிலை: எம்.எஸ். குமணன் டி.மூர்த்தி, ஜி. செல்வராஜ்.பி. சந்தானம்,ஆர். சிவஞானம்.

சிறப்புரை கே.பி.ராமலிங்கம் எஸ்.எஸ்.எம்.பாலகிருஷ்ணன் ஏ.ஜி.நடராசன் ஏ. சுப்பிரமணியம் ஆர்,ரங்கசாமி மா.சுப்பிரமணியம் உத்தமசோழன், எஸ் தவமணி, ஏ. வீரபத்திரன், கே ஆர் ராஜலிங்கம் ஏ ஆறுமுகம், என் பிரகாஷ், புரா டெக்ஸ் பெரியசாமி, பி மாரியப்பன், பி பழனிசாமி, கே ஏ முகமது அலி மற்றும் பலர் நன்றியுரை: ஆர் மாதேஸ்வரன்

### 98- வது வட்டம்

திருவல்லிக்கேணி பகுதி 98'வட்ட எம், ஜி. ஆர் இளைஞர் அணி சார்பாக நேற்று மாலை 7 மணியளவில் பி.சீனிவாசன் தலைமையில் டி. ஆர். நாதன் முன்னிலை வகிக்க சி மனோகரன் அனைவரையும் வரவேற்க கழக பொதுக் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்தில் திருவை அண்ணாமலை சி. வ் ஆடழகன் வண்ண கோவிந்தன் வி. ராஜ்குமார் வி. ஐயப்பன் ஜி. சுதாகர் வி. மனோகரன் எம்.ஜி.கனக சபை வி. சி. ராமகிருஷ்ணன் எம்.கே. மணிமாறன் உட்பட மற்றும் பலர் பேசினர்,

நன்றியுரையை வி. தீனதயாளன் கூறுகிறார்,

## தலைமைக் கழக அறிவிப்பு

### கழக ஆய்வுக்குழு இணைப்பு

மதுரை மாவட்டம

திரு. கே. ஆர். நடராசன் எம்.பி. அவர்கள்

கழகத்தலைவர்

**அன்னை ஜானகி எம். ஜி. ஆர்.**

அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப் படுகிறது.

சென்னை 5-3-88

எஸ். இராகவானந்தம்
(பொதுச்செயலாளர் பொறுப்பு)
அனைத்திந்திய அண்ணா தி மு கழகம்

## தலைமைக் கழக அறிவிப்பு

### கழக வழக்குரைஞர்கள் கூட்டம்

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக வழக்குரைஞர்கள் கூட்டம் 12-3-1988ம் நாள் சனிக்கிழமை காலை 10 மணிக்கு சென்னையிலுள்ள மீனாட்சி கல்யாண மண்டபத்தில் (மாம்பலம் அலுவலகம் அருகில்) நடைபெறும்: இக்கூட்டம், கழகத்தலைவர்

**அன்னை ஜானகி எம்.ஜி.ஆர்.**

அவர்கள் தலைமையில் நடைபெறும்:

கழக வழக்குரைஞர்கள் அனைவரும் இக்கூட்டத்தில் பங்குபெறுமாறு கேட்டுக்கொள்கிறேன்,

கழகத் தலைவர்

**அன்னை ஜானகி எம்.ஜி.ஆர்.**

அவர்களின் ஒப்புதலுடன் இவ்வறிவிப்பு வெளியிடப் படுகிறது.

சென்னை-5-3-1988

எஸ், இராகவானந்தம்
(பொதுச்செயலாளர் பொறுப்பு)
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

# காகித ஓடம் கரை சேராது: சைதை துரை [illegible] வர்ணனை

சென்னை, மார்ச். 5-

நாவலருக்கு இதயமும் இல்லை - மனிதாபிமானமும் இல்லை என்று அடுக்கடுக்கான ஆதாரங்களை அள்ளி வீசி கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு எழுச்சியூட்டினார் சைதை துரைசாமி. சைதை [illegible]தரடி திடலில் மாநாடு போல் நடைபெற்ற கழகக்கூட்டத்தில் பங்கேற்று சைதை துரைசாமி பேசியதாவது:-

இங்கே மக்கள் பெருந்திரளாக கூடி உள்ளீர்கள். இங்கு பேசுகிற எங்களில் யாரும் கவர்ச்சியாக இல்லை இருந்தும் இங்கு பெருந்திரளாகக் கூடி இருக்கின்றீர்கள் அதற்கு காரணம் என்ன? புரட்சித் தலைவர் விட்டுச் சென்ற பணிகளை இவர்கள் தொடர்ந்து செய்வார்கள் என்று நீங்கள் நம்புவதுதான்.

### 1972 உணர்ச்சி...

மக்கள் யார் பக்கம் இருக்கிறார்கள் என்பதை இன்று நாடு நிரூபித்துக் கொண்டிருக்கிறது. 1972ம் ஆண்டு இருந்த உணர்ச்சி வேகம் இன்று இருக்கிறது. இதை மதுரையும், சேலமும் நிரூபித்தது.

### இதோ... சாட்சியம்

புரட்சித்தலைவர் அரசை மத்திய அரசு ஒரு முறை கலைத்தது. மக்கள் மீண்டும் புரட்சித்தலைவரை ஆட்சியில் அமர்த்தினர். இப்போது மீண்டும் கலைத்துள்ளனர் அன்னை ஜானகியை மக்கள் மீண்டும் முதல்வராக அமர வைக்க உள்ளார்கள், அதற்கு இந்தக் கூட்டமே அத்தாட்சி

இங்குவந்திருக்கும் கூட்டம் தானாகவந்த கூட்டமேதவிர 15 அல்லது 20 ரூபாய் கொடுத்து கூட்டி வரப்பட்ட கூட்டமல்ல இது புரட்சித்தலைவரின் கொள்கைகளை யார் நிறைவேற்றுவார்கள்? புரட்சித்தலைவரின் உண்மைத் தம்பிகள் யார் என்பதை மக்கள் உணர்ந்ததால் கழகக் கூட்டங்களுக்கு பெருந்திரளாக வருகிறார்கள்.

### காகித அரசியல்

காகித அரசியல் நீண்ட காலம் நிற்காது. திசைமாறிய நண்பர்கள் இப்போதாவது உணர்ந்து புரட்சித்தலைவரின் கொள்கைகளை காப்பாற்ற வாருங்கள்.

நாவலரை முதல்வராக ஏற்க வேண்டும் என்றால்எப்படிமுடியும்? அவர் இதயமே இல்லாதவர் மனிதாபிமானத்துக்கும் அவருக்கும் சம்பந்தமே இல்லை. இதற்கு சில உதாரணங்களைக் கூற விரும்புகிறேன்.

### இதயமற்ற நாவலர்

சென்னைநகரில் வெள்ளம் வரும்போதெல்லாம் இந்தத் தொகுதி அதிகமாக பாதிக்கப்படுகிறது. எனவேபுரட்சித் தலைவரிடம் வெள்ள தடுப்பு சுவர் கட்ட வேண்டும் என்றேன் உடனே ரூபாய் 3 கோடியில் வெள்ள தடுப்பு சுவர் கட்டும் திட்டம் உருவாக்கப்பட்டு நிதியமைச்சர் என்ற முறையில் நாவலரிடம் கோப்பு சென்றது ஆனால் நாவலர் அதைத் திருப்பி அனுப்பி விட்டார்.

அவரிடம் நான் சென்று கேட்ட போது சென்னையில் உள்ளவர்கள் நமக்கு ஓட்டுப் போடுவதில்லை அவர்களுக்கு ஏன் மூன்று கோடி ரூபாய் ஒதுக்கவேண்டும் என்றார். அதன் பின் புரட்சித் தலைவர் தலையிட்டதால்இப்போது அந்த திட்டம் செயல்படுத்தப்படுகிறது.

இதுபோல்இந்தத் தொகுதியில் ரிக்ஷாத் தொழிலாளர்கள் சலவைத் தொழிலாளர்கள் என்று தொழிலாளர்கள் நிரம்ப உள்ளனர் அவர்களுக்கு மாடிவீடு கட்டித்தர வேண்டு மென்று புரட்சித் தலைவரிடம் கூறினேன் புரட்சித் தலைவர் இதை ஏற்ற பின்பும் நாவலர் முட்டுக்கட்டை போட்டார். புரட்சித் தலைவர் தலையிட்டதால் அந்தப் பணிகள் நடைபெறுகிறது புரட்சித்தலைவர் இல்லை என்றால்அந்தப்பணி எப்படி நடைபெறும்.

இப்படி மக்கள் பணிகளில் கொஞ்சம் கூட ஆர்வம் காட்டாத நாவலரை நான் முதல்வராக ஏற்றால் என் தொகுதி மக்கள் என்னை ஏற்க மாட்டார்கள் அதனால் தான் நாவலரை நான் ஏற்கவில்லை.

நாவலருக்காக நான் பரிதாபப் படுகிறேன். அவரை யாரும் அங்கு மதிப்பதில்லை அங்கிருந்து வெளியேற வாய்ப்பை பார்த்துக்கொண்டிருக்கிறார்.

புரட்சித்தலைவரின் உண்மையான இயக்கம் அன்னை ஜானகி எம்ஜிஆர் தலைமையில் இருப்பதுதான்.

எங்களை ஐந்து ஆண்டுகளுக்கு சட்டமன்ற உறுப்பினராக பணியாற்ற தேர்ந்தெடுத்தீர்கள். ஆனால் மூன்று ஆண்டு 33 நாட்களிலேயே மத்திய அரசு சதி செய்து கலைத்து விட்டது. ஆனாலும் எங்கள் பணி தொடரும். மக்களுக்காக என்றும் பணியாற்றுவோம்.

இவ்வாறு சைதை துரைசாமி பேசும்போது கூறினார்.



# விண்ணை முட்டுகிறது விலைவாசி-ராஜீவ் காந்தியே ராஜினாமா செய்-மார்ச் 15 "பாரத பந்த்"

○ கைது- வழக்கு - சிறை என்று மிரட்டலா?

★ புகழ்மிக்க தென்பாண்டி மண்டலத்து வீரமறத்தியின் வயிற்றில் பிறந்தவன் நான் உனது பெட்டை மிரட்டலுக்கா அஞ்சுவேன்?

● "ஏன் ஆட்சியைக் கலைத்தோம் - மீண்டும் அன்னை ஜானகியின் உண்மையான கழகத்தோடு உறவு வைத்துக் கொள்ளலாம் என்று டெல்லியில் மறு சிந்தனை இருப்பதாகச்சொல்கிறார்கள்"

## மண்டியிட்டாலும், தெண்டனிட்டாலும், மடிப்பிச்சை கேட்டாலும்

# "காங்கிரசோடு உறவு என்பது இனிஇல்லை"

## கழகத் துணைப் பொதுச் செயலாளர் டாக்டர் கா. காளிமுத்து சங்கநாதம்

("அண்ணா" நாளிதழ் சிறப்புச் செய்தியாளர்கள் எஸ் பாலுமணி - மு. பாலு)

**திருக்கழுக்குன்றம், மார்ச் 5- அன்னை ஜானகி எம்.ஜி. ஆரின் தலைமையிலான ஆட்சியை ஏன் கலைத்தோம் உண்மையான தொண்டர்கள் அன்னையாருடன் தானே இருக்கிறார்கள்-அவர்களோடு மீண்டும் உறவு வைத்துக்கொள்ளலாமா-மீண்டும் தேர்தல் கூட்டு வைத்துக கொள்ளலாமா என்ற சிந்தனையோட்டம், மறுசிந்தனை டெல்லியில் இருப்பவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது என்று இங்கே பேசிய அருமைத்தம்பி நாடாளுமன்ற உறுப்பினர் டாக்டர் ஜெகத்ரட்சகன் குறிப்பிட்டார்.**

இங்கே ஒன்றை திட்டவட்டமாக, தெளிவாக, உறுதியாக இதயதெய்வம் புரட்சித்தலைவரின் உண்மையான கழகத்தின் துணைப்பொதுச்செயலாளர் என்ற முறையில் அறுதியிட்டுக் கூறவிரும்புகிறேன் இனி அவர்கள் (காங்கிரசார்) மண்டியிட்டாலும் சரி, தெண்டனிட்டாலும் சரி, மடிப்பிச்சை கேட்டாலும் சரி- இனி காங்கிரசோடு உறவு என்பது எப்போதும் இல்லை- அது முடிந்த கதை என்று கழகத் துணைப் பொதுச் செயலாளர் டாக்டர் கா. காளிமுத்து எழுச்சி முழக்கமிட்ட போது- அந்த நள்ளிரவிலும் கூடியிருந்த பல்லாயிர மக்களும் ஆர்ப்பரித்தனர். எழுச்சி முழக்கமிட்டனர் - எங்கும் உணர்ச்சிப்பிரவாகம். 1988 ஆம் ஆண்டா-1972 ஆம் ஆண்டா என்று வியக்க வைத்த எரிமலைகளாய் கழகத்தொண்டர்கள் காட்சியளித்தனர்.

செங்கை மாவட்டம் திருக்கழுக்குன்றத்தில் நேற்று [வெள்ளி] நடந்த ஆட்சித் கலைப்பு கண்டனப் பொதுக் கூட்டத்தில்கலந்து கொண்டு கழகத் துணைப்பொதுச்செயலாளர் ஐம்பது நிமிடம் உரையாற்றினார் கூட்ட மிகுதியால் நெரிசல். புழுக்கம் மின்தடை எதையும்பொருட்படுத்தாமல் நள்ளிரவு 12.45 மணிவரை கழகத்தவரும், பொதுமக்களும் உணர்ச்சியின் உச்சத்தில் ஆர்ப்பரித்தனர்.

டாக்டர் கா, காளிமுத்து பேசும்போது கூறியதாவது.-

திருக்கழுக்குன்றம் திராவிட இயக்க வரலாற்றின் திருத்தலம் 1972ஆம் ஆண்டில் இதயதெய்வம் புரட்சித் தலைவர் இங்கேதான் உணர்ச்சிக் குரலெழுப்பினார் திருக்கழுகுன்றம் ஒரு தீர்ப்பு எழுதுகிறதென்றால் அது தமிழகத்தின் ஒட்டுமொத்தத் தீர்ப்பு திராவிட இயக்க வரலாற்றில்-மறுமலர்ச்சி காண வந்த மற்றுமொரு மார்டின் லூதராகப் புரட்சித்தலைவர் உருவெடுத்து தமிழகத்தில் எழுச்சியூட்டி-புரட்சிக்கு வித்திட்ட திருத்தலம் திருக்கழுக்குன்றம்

நமது இதய தெய்வம் புரட்சித்தலைவர் மறைவுக்கு பின் நடந்த சம்பவங்கள் அனைத்தையும் நீங்கள் அறிவீர்கள் நாம் கண்கலங்கி கைபிசைந்து நின்றநேரத்தில் தங்கள் தலைவனை தந்தையை பெற்ற தாயை இழந்துவிட்ட சோகத்தில் மூழ்கியிருந்த நோத்தில் சோகமே உருவாக ஊண் இன்றி, உறக்கமின்றி கண்ணீர்க்கடலில் மிதந்து கொண்டிருந்த அன்னையைச் சந்தித்தோம் ஆறுதல் கூறினோம்.

### தாயே வா!

"தாயே-இழக்கக் கூடாததை இழந்தோம் ஈடு செய்ய இயலாத பேரிழப்பு நீங்கள் பூவிழந்து பொட்டிழந்து நிற்பதைப்பார்த்து பதறுகிறோம் ஆனால் தாயே தமிழகமே பொலிவிழந்து வலிவிழந்து ஆற்றுவாரும் தேற்றுவாருமின்றி தேம்பி நிற்கிறது கழகத்தொண்டர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும் நீங்கள் காட்டுகிற வழியில் செல்ல இருகின்ற கட்டளையை எங்கள் இதய தெய்வம் புரட்சித்தலைவரே இட்ட கட்டளையாகஏற்றுநடத்தத் தயாராக இருக்கிறது என்று சொன்னபின் அந்தத்தாய் வேறு வழியின்றி விழிநீர் துடைத்து பெரும் பொறுப்பினை தன்தோள்களில்சுமக்க முன்வந்தார்.

அதற்குப்பிறகு நடந்த சம்பவங்கள் எல்லாம் உங்களுக்குத் தெரியும் நாம் போற்றித் துதிக்கிற அந்த தாய் டெல்லி செல்கிறார் பிரதமரைச் சந்திக்கிறார். பிரதமர் அன்புடன் வரவேற்கிறார். "ஆட்சி நடத்துங்கள் உங்களுக்கே எங்கள் ஆதரவு தொடர்ந்து இரண்டு ஆண்டுகளுக்கு நீங்களே முதல்வர் மக்கள் நலத் திட்டங்களுக்கு எவ்வளவு செலவானாலும் எங்களிடம்கேளுங்கள்"; உதவுகிறோம் என்று உறுதியளிக்கிறார் உறுதி அளித்தது யார்? எண்பதுகோடி மக்களைக் கொண்ட இந்தியத் துணைக்கண்டத்துப்பிரதமர் அன்னை நம்புகிறார். சூதுவாது அற்ற தூய உள்ளம் கொண்ட அன்னை மன நிறைவோடு தமிழகம் திரும்புகிறார்.

### எங்கள் வாயை அடைத்தார்

நாட்கள் நகர்ந்தன: காங்கிரஸ் துரோகம் செய்யப் போகிறது. நமது முதுகிலே குத்தப் போகிறது என்று எங்களுக்கெல்லாம் செய்தி வருகிறது கழகத்தின் மூத்த தலைவர்கள் எல்லாம்இந்தச் செய்தியால் திடுக்கிட்டு அன்னையிடம் சென்று இதை சொல்கிறார்கள்;

"ஆசிய ஜோதி நேருவின் பேரன் இந்திராவின் மகன் நமது இதய தெய்வம் புரட்சித்தலைவரை தன் குடும்பத்தில் ஒருவராக போற்றி மதிக்கும் பெருந்தகையனார் இந்தியாவின் மிகப்பெரிய விருதான் 'பாரத் ரத்னா'பட்டத்தை அவருக்கு சூட்டி மகிழ்ந்த பிரதமரைச் சந்தேகிக்கலாமா? அவர் வகிக்கும் பதவி எவ்வளவு பெரிது? அவரது வாக்குறுதி எத்தனை மகத்தானது? என்று சொல்லிச் சொல்லி எங்களது வாயை அடைத்தார் அன்னை.

அதற்குப்பிறகு நடந்த துரோகங்களை நீங்கள் அறிவீர்கள். நான் இப்போது பிரதமரைப் பார்த்து - கூடியிருக்கும் பல்லாயிரக் கணக்கான மக்களை சாட்சியாக வைத்து நீதி கேட்கிறேன். எண்பது கோடி மக்களைக்கொண்ட தேசத்தின் பிரதமர் தான் கொடுத்த ஒரு வாக்குறுதியை. அதுவும் ஓர் அன்னைக்குக் கொடுத்த வாக்குறுதியை காற்றிலே பறக்க விடுகிறார் என்றால்...

(மக்கள் ஆவேசம்- "வெட்கம் வெட்கம்" "துரோகம் துரோகம்" என்று மக்கள் முழக்கம்

நான் தெளிவாகவே கேட்கிறேன். இந்த நாட்டின் பிரதமருக்கும் சாலையோரத்தில் நின்று கொண்டு எதை எதையோ பேசிக்கொண்டிருப்பவருக்கும் என்ன வித்தியாசம்?

]ஆரவாரம் நீண்ட கை தட்டல்]

### காங்கிரசார் முகத்தில் கரிபூசிக்கொண்ட வியாழன்

தாங்கள் பின்னிய சதி வலையில் அன்னையின் ஆட்சியை கவிழ்த்துவிடலாம் ஜனவரி 28ம்ஆம்நாள்மாலையிலேயே காங்கிரஸ்ஆட்சிக்கு வரும் மூப்பனார் முதல்வர் ஆவார் என்றெல்லாம் "முட்டாள்களின் சொர்க்கம்" என்பார்களே அப்படி அவர்கள் கானக்கண்டு கொண்டிருந்தார்கள்,

அவர்கள் ஒன்றை மறந்து விட்டார்கள். ஒன்றைக் கணக்கிலெடுத்துக்கொள்ளத் தவறினார்கள்.

சட்டமன்றத்தில் ஒரு பெரும் சக்தி இங்கே நண்பர்கள் நிலக்கோட்டை பாலுசாமியும் எத்திராஜலும் சி என் விஸ்வநாதனும் நடராசனும் அண்ணன் ஆனூராரும் எடுத்துச் சொன்னார்களே அதைப்போல "இரும்பு மனிதர்" பி. எச். பாண்டியன் சபாநாயகர் என்பதை அவர்கள் மறந்துபோனார்கள் சதிவலை அறுந்தது சரித்திரம் திசை திரும்பியது.

[பலத்த கை தட்டல் ஆரவாரம்]

அந்த ஜனவரி 28 வியாழனை காங்கிரஸ்காரர்கள் கறுப்பு வியாழன் என்று வர்ணிக்கிறார்கள் இல்லை இல்லை. அது காங்கிரஸ்காரர்கள்தங்கள் முகத்தில்கரிபூசிக் கொண்ட நாள்

(கைதட்டல்)

### நாவலரே முதற்துரோகி

இந்த துரோகத்துக்கு ஜெயலலிதாவோடு இணைந்து காங்கிரசோடு துணை நின்ற நாவலர் தினமொரு அறிக்கை விடுகிறார். கழகத்தைப் பற்றி கழக ஆட்சியைப் பற்றி கழகத்தலைமை புரட்சித் தலைவர் பற்றி. எங்கள் அன்னை ஜானகி எம்.ஜி. ஆர் பற்றிப்பேச உமக்கு என்ன உரிமை என்னதகுதி இருக்கிறது? நீர் எப்போது வந்தீர்?

தோழர்களே 1972 ஆம் ஆண்டு திமு கழக பொதுக் குழு செயற் குழு கூட்டம் நடந்த போது புரட்சித்தலைவரை வெளியேற்ற கருணாநிதி தயங்கி சேப்பாக்கம் அரசினர் விடுதியில் இருந்து குழம்பிப் போயிருக்கிறபோது அவருக்கும் தெரியாமல் வெளியே வந்து பத்திரிகையாளர்களை அவசர அவசரமாக அழைத்து "எம்.ஜி.ஆரை கட்சியிலிருந்து நீக்கியிருக்கிறோம்" என்ற முதற்துரோகியேஇந்த நெடுஞ்செழியன் தான்.

[கூட்டம் எரிமலைஆகிறது துரோகிகளை எதிர்த்து போர்க்குரல்]

இன்றைக்கு வாய்க்கொழுப்பெடுத்துப்போய் ஜெயலலிதா கோவையில் பேசுகிறார், ஸ்ரீரங்கம் கோவில் பட்டை நெய் சோற்றுக்குக் கையேந்தும் பண்டாரம் ஒருவர் அடியெடுத்துக் கொடுத்தாராம்

(ஆரவாரம்)

உடனே அந்தஆணவக்காரி "ராமாவரம் தோட்டத்திற்குள் நுழைவேன்" என்று அறிவிக்கிறார்.

இங்கேயுள்ள தாய்மார்களும் பெரியவர்களும் மன்னிக்க வேண்டும்.

நான் பச்சையாகவே கேட்கிறேன் ராமாவரம் தோட்டத்திற்கும் உனக்கும் என்ன உறவு? அதில் உனக்கு என்ன பாத்தியதை?

உனக்கு என்ன தகுதி? அது புரட்சித்தலைவர் வாழ்ந்த திருத்தலம் எங்கள் அன்னை ஜானகி எம். ஜி. ஆர். உறையும் திருக்கோவில்

அதில் பாத்தியதைகொண்டாட நீயார? புரட்சித்தலைவருக்கு மனைவியா? மகளா? ஊர்சுற்றும் கோவில் மாடே உனக்குஎன்ன உரிமை?

(வெட்கம் வெடகம் மக்கள் ஆரவாரம்)

### பேட்டை மிரட்டல்

காங்கிரஸ் எதிர்ப்புணர்ச்சி என்பது என் ரத்தத்திலும் என் சிந்தையின் அணு ஒவ்வொன்றிலும் கலந்து விட்ட ஒன்று நான் பள்ளிப்பாலகனாய் இருந்த போதே தேவா திருமகனுக்கு காங்கிரஸ் இழைத்த கொடுமைகளை நேரிலேயே அறிந்ததால் இந்த உணர்வு என் ரத்தத்தில் எப்போதும் ஓடிக் கொண்டிருக்கிறது.

காங்கிரஸ்காரன் எல்லை மீறுகிற போதெல்லாம் புரட்சித்தலைவர் என்னை அழைத்து "மட்டை அடியாக அடி" என்பார் அடிப்பேன் அடங்குவார்கள்

(சிரிப்பு-ஆரவாரம்)

அது அவருக்கும் எனக்கும் மட்டுமல்ல கழகத்தலைமைக்கும் தெரிந்த ரகசியம்.

இன்றைக்கு இவ்வளவு பெரியகூட்டம் நள்ளிரவிலும் கூடுகிறது என்றால் அது எனக்காக வந்த கூட்டமல்ல புரட்சித்தலைவருக்காகவந்த கூட்டமென்பதை உணர்கிறேன்.

தஞ்சையில் ஜெயலலிதாவிற்கு வரவழைக்கப்பட்ட கூட்டத்தை விட அன்புச் சகோதரர் துரை-கோவிந்தராசன் ஏற்பாடு செய்த இக் கூட்டத்திற்கு லட்சோப லட்சம் மக்கள் அதனால் ஜெயலலிதாவிற்கு உடலெல்லாம் பற்றி எரிகிறது. காங்கிரசார் துடிதுடிக்கிறார்கள்.

அதனால் என் மீது வழக்குஎன்கிறார்கள்"; கோப்புக்கள் நகருகிறது" என்று எழுதுகிறார்கள், சிறை என்கிறார்கள்.

(விடமாட்டோம் விடமாட்டோம்)

அவர்களுக் கெல்லாம் ஒன்றை இங்கே தெளிவாகச் சொல்லிட விரும்புகிறேன் உன்னுடைய பெட்டைமிரட்டலுக்கு அஞ்சுகிற கோழையோ- மோழையோ அல்ல நான்.

(கைதட்டல்)

தென்பாண்டி மண்டலத்து மண்ணின் வீரமறத்தி பெற்றெடுத்த இந்தக் காளிமுத்து - வழக்கு என்ன, சிறை என்ன, தூக்குதண்டனையே ஆனாலும் - என் இதய தெய்வம் புரட்சித்தலைவரின் கொள்கைகளை எப்போதும் முழங்கிக் கொண்டேயிருப்பேன்

[ஆரவாரம் - கண்ணீர் நீண்ட கைதட்டல்கள்]

அன்னை ஜானகி எம். ஜி. ஆரை கோட்டையில் முதலமைச்சராக மீண்டும் அமர்த்தும் வரை ஓய மாட்டோம் ஓயமாட்டோம்.

(கைதட்டல்)

முதலமைச்சர் கனவுகளோடு தமிழகம் வந்திருக்கும் மூப்பனாரால் ஒன்றும் முடியப்போவதில்லை காங்கிரசின்கடைசிக்காரியங்களை சாங்கியங்களைச் செய்யவே அவர் வந்து இருக்கிறார்.

[ஆரவாரம்]

அன்னை ஆட்சி கவிழ்க்கப்பட்டதால் - இனி தமிழகத்

(4ம் பக்கம் பார்க்க)



Edited and published by K. RAVINDRAN on behalf of Thangamani Publication and Printed by all India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson manickam Road, MADRAS - 600 029.

## மூடப்பட்ட ஆலைகள்-வாடிக்கிடக்கும் வயிறுகள்

## ராஜீவ் காந்தியே ராஜினாமாச் செய்-மார்ச் 15 "பாரத் பந்த்"



# புரட்சி மலர்கள்

## டாக்டர் கா.காளிமுத்து

**மத்தியிலே ஆளுகின்ற இந்திய அரசு- தமிழகத்தில் புரட்சித்தலைவரின் புகழாலும்-செல்வாக்காலும் வெற்றிகளை ஈட்டியிருக்கிறது!**

**மைய அரசு செய்த தீங்குகளை-மறைத்திட்பபயன்படும் கேடயமாகவே புரட்சித்தலைவர் இருந்தார்.**

**மத்தியஆட்சிக்குஎதிராகத் தமிழகம் வீறு கொண்டு எழுந்த போதெல்லாம் - அமைதிப் படுத்தி விட்டு- மையஅரசிடம் பேசுவதன் மூலம் தமிழகப்பிரச்சினைகளுக்கு தீர்வு காண முற்பட்டவர் அவர்.**

ஆனால் நன்றியில்லாத காங்கிரஸ்-அவர் இருந்த போதே அவருக்கு எதிராக சதிவலை பின்னியது. அவர் மறைந்தார்! அவரது ஆட்சியும் -எதேச்சதிகார மனப்போக்குக் கொண்ட மத்திய பீடத்தால் கலைக்கப்பட்டு விட்டது! காங்கிரசோடு உறவும் தோழமையும் கொண்டிருந்த எங்களை-விழித்து எழ வைப்பதற்கு காங்கிரஸ் கயமைதான் காரணம்!

புரட்சித்தலைவர் மறைந்த பின்னும் உயிரோட்டமுள்ள மக்கள் நலன் காக்கும் பேரியக்கமாக இயக்கத்தை விட்டு விட்டுப் போயிருக்கிறார்!

**எந்த நிலையிலும் ஏழை - பாட்டாளி-உழைக்கும் வர்க்க நலனுக்கு உதவும் வகையில்தான் அன்னை ஜானகி எம். ஜி. ஆரின் தலைமையிலுள்ள இயக்கம்-குரல் கொடுக்கும். அதற்கேனப் பாடுபடும் ஏனையசக்திகளுக்கும் கைகொடுக்கும். மார்ச்-15இல் 'பந்த்' நடத்துவது துணைக் கண்டத்திலுள்ள எதிர்க் கட்சிகள் செய்துள்ள தூயமுடிவு!**

அந்த முடிவை வரவேற்பதோடு- தமிழகத்தில் அதை முழுவெற்றி பெறச்செய்யும பொறுப்பு நம் கட்சியினுடையது 'பந்துக்கு முன்பும்- பின்பும விளக்கிப் பேச வேண்டிய பல விசுவரூபப்பிரச்சினைகள் இருக்கின்றன. மக்களுக்கு அதை நாம் தெளிவாக்க வேண்டும்,

**இதுவரை-தேரிந்தோ-தெரியாமலோ மைய அரசுக்கு வால்பிடிக்க வேண்டிய நிலையில் நாம் இருந்தோம் என்பதை மறுப்பதற்கில்லை! நாணி நடுங்குகிறோம் அதற்காக. இனி வால்பிடிக்கப் போவதில்லை! இப்போது அதை எதிர்த்து அஞ்சாமையுடன் வாள் பிடித்து நிற்கிறோம்!**

மாசு நீங்கிய மணியாக - பாசி அகற்றப்பட்ட பளிங்குத் தடாகமாக இயக்கம் தூய்மைப்பட்டுவிட்டது. இந்தியாவின் தலைமைப்பீடம் இழைத்திருக்கும் தவறுகள் பிழைகள் குற்றங்கள் குறைகள் ஏராளம்!

ஏழை எளியோரின் வாழ்வை வாட்டி வதைத்து கண்ணீர்விடவைத்துவிட்டுபன்னீர் குளத்தில சரசவல்லிகளோடு நீராடும் பிரெஞ்சுப் பிரபுக்களைப்போலத்தான் மத்திய ஆட்சி நடந்து கொள்கிறது.

**நிலச்சீர்திருத்தசட்டங்களெல்லாம் வந்தன! வந்தவை அனைத்தும் காகிதச் சுரைக்காய்களாகவே உள்ளன.**

மிராசுகளின் மேனி மெருகு குலையாமல் அவர்களுக்குக் காவல் புரிகிறது மத்திய அரசு!

**இழுத்து மூடப்பட்ட ஆலைகள்!- தனியார் கையில் தங்கத் தாம்பாளத்தில் வைத்துத் தரப்பட்ட பொதுத்துறை நிறுவனங்கள் இதன்மூலம் - தொழிலாள வர்க்கம் வெடிப்பதற்குமுன்னுள்ள எரிமலை நிலையில் இருக்கிறது!**

**இந்தியப் பிரதமருக்கு 'Mr கிளீன்' என்று ஆரம்பத்தில் அவருக்குச் செல்லப்பெயர்செப்பிமகிழ்ந்**

# மௌனப் புரட்சி

**தனர் - சுற்றியிருந்த கூட மேந்திகள்! அதற்கு என்ன பொருள் என்பது இப்போது புரிகிறது!**

**மக்கள் பணத்தை சுத்தமாக 'கிளீன்' பண்ணி சுய நலத்திற்குப் பயன்படுத்துவதுதான் அதன் பொருள்!**

எவர் மீதும் இலஞ்ச - ஊழல் குற்றச் சாட்டைச் சுமத்தும் அடிப்படை யோக்கியதையைப் பிரதமர் பறிகொடுத்துவிட்டார்.

''பே பாக்ஸ் போஃபர்ஸ் போன்'' றவைகளை எவ்வளவு பெரிய பட்டுப் படுதாவைப் போட்டு மூடினாலும் அதையும கிழித்துக்கொண்டு வெளி வருகிறது

இந்தியாவில் ஏழைகள் எண்ணிக்கை அதிகமாகிறது! சுவிஸ் வங்கியில் - இந்தியப் பிரமுகர்களின் கணக்கு பல கோடியாக வளர்கிறது!

திரிபுராவில் இராணுவத்தைத் துணை வைத்துக்கொண்டு- தேர்தல் நடத்தி - ஜன நாயகத்தின் மூக்கை அறுக்கிறார்கள்!

## புதிய வரிகள் 1535 கோடி! வறட்சி நிவாரண சர்சார்ஜ் என 500 கோடி!

நிலக்கரி பெட்ரோல்-உருக்கு விலை உயர்வு மூலம் 1800 கோடி! ரயில் கட்டண உயர்வு 622 கோடி! தபால் தொலை பேசி கட்டண உயர்வு 549 கோடி!

**சுங்கவரி-கலால் வரி மூலம் பண முதலைகள் சுருட்டிக் கொள்ள ரூ. 550 கோடி!**

**இல்லாதவன் இருப்பதோ வாழ்வின் கடை கோடி!**

**விட்டுவைக்கலாமா மத்திய அரசை! 'பந்த்'தில் கலந்து கொள்வோம்! மார்ச் - 15ல் தமிழகம் மௌனப் புரட்சி செய்யட்டும்.**

# காளிமுத்து சங்கநாதம்

[ ம பக்கத் தொடர்ச்சி ]

தில் மட்டுமல்ல - அகில இந்தியாவிலும் காங்கிரசை ஆட்டம் காணச் செய்வதே எங்கள் பணி அதனால்தான் மார்ச் 15ஆம் நாள் நடக்கும் ''பாரத் பந்த்'' தில் பங்கேற்கிறோம்.

(பலத்தகைதட்டல்)

இந்திய இலங்கை ஒப்பந்தம் புரட்சித்தலைவர் ஒப்புக்கொண்ட ஒப்பந்தமல்ல தளபதி பிரபாகரனை ஒதுக்கி விட்டுவிட்டு தலைப்புலிகளைக் கொன்று ''சமாதானம்'' என்ற போர்வையில் போரை நடத்துவதை இனித்தமிழகம் தாங்கிக் கொள்ளாது என்பதைத் தெரிவித்து.

அண்ணாவின் திரு நாமம் வாழ்க!

இதயதெய்வம் புரட்சித் தலைவர் புகழ் வளர்க!

அன்னைஜானகிஎம் ஜி ஆர் வாழ்க வாழ்கவென வாழ்த்தி விடை பெறுகிறேன்.

இவ்வாறு டாக்டர் கா. காளிமுத்து பேசும் போது கூறினார்.

## மிலிடரி இன்ஜினீயர் சர்வீஸ்

கமாண்டா ஒர்க்ஸ் இன்ஜினீயர்ஸ் [திட்டம்] தொழிற்சாலை எண் 1, ஆவடி, சென்னை-54 அவர்களால் சென்னை, ஆவடியிலுள்ள கனரக வாகனத் தொழிற்சாலைக்கு 'Arboriculture' அமைப்பதற்கான டெண்டர்கள் வழங்குவதற்கு, மிலிடரி இன்ஜினீயரிங் சர்வீஸ், மத்திய பொதுப் பணித்துறை பொதுப்பணித்துறை ரெயில்வே ஆகியவற்றை சார்ந்த உரிய வகுப்பிலுள்ள காண்ட்ராக்டர்களிடமிருந்து விண்ணப்பங்கள் 1988 மார்ச் 12ம் தேதிவரை வரவேற்கப் படுகிறது உத்தேச செலவுத்தொகை ரூ 2.80லட்சம் வேடணித்தொகை டெபாஸிட் ரூ. 5600- இதர விவரங்களுக்கு 3.3.88 தேதியிட்ட இந்தியன் டிரேட் ஜர்னலைப் பார்க்கவும்.

Davp 683(2751)787

## வில்லிவாக்கம் 32, 33 வது-வட்ட செயல் வீரர்கள் கூட்டம்

சென்னை; மார்ச், 5. வில்லிவாக்கம் 32 ,33-வது வட்ட செயல் வீரர்கள் கூட்டம் 6ம் தேதி காலை 10 மணி அளவில் வில்லிவாக்கம் எண் 34, பாலியம்மன் கோயில் தெரு அன்னை வேளாங்கண்ணி பள்ளியில் நடை பெறுகிறது.

செயல்விரர்கள்கூட்டத்திற்கு கோ. ஆ. ஜார்ஜ் தலைமை வகிக்கிறார்.

ஏ,எல். நடராசன். து.ஆ. ராமகிருஷ்ணன் முன்னிலை வகிக்கிறார்கள் பி. வீரராகவன் கொ.சு.உதயன், எம். ண்ணசன், ஏ. வெங்கடேசன், கொ,ஜெயபால், வி. சாரங்கபாணி, ஆகியோர் வரவேற்புரை ஆற்றுகிறார்கள்.

சென்னை மாவட்ட கழகச் செயலாளர் ஜேப்பியார் மற்றும் ஜே சி டி பிரபாகரன் ஆ ஜெயராம் மற்றும் பலர் கூட்டத்தில் கலந்து கொள்கின்றனர்.

## மிலிட்டரி என்ஜினீயர் சர்வீஸ்

ஆவடியில் CVRDEயில் மேனிலை RCC நீர்த்தேக்கம் (Recoverhead resorvoir) கட்ட டெண்டர் பத்திரம் வழங்குவதற்கு உரிய பிரிவு காண்ட்ராக்டர்களிடமிருந்து 10-3-88 வாக்கில் விண்ணப்பங்களை Garrison Engineer (Project) (Indep) 'R&D' Avadi, Madras-54 அவர்கள் வரவேற்கிறார்கள். திட்ட மதிப்பு ரூபாய் 4.45 லட்சம், டேவணித்தொகை ரூபாய் 6.675 திட்டம் முடிக்கவேண்டிய காலம் 6 மாதம். விவரங்களுக்கு இந்திய வர்த்தக ஜர்னல் 20-2-88 இதழைப் பார்க்கவும்.

davp: 683-2837-87

## சமூகநலத் துறை

அரசாணை நிலை எண்250

நாள் 1.3.88

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலத்தை ஒரு பொது நோக்கத்திற்காகக் கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு அந்நிலத்திற்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்படவேண்டிய இழப்பீட்டுத் தொகை செலுத்தப்பட வேண்டுமென்றும் இவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே 1894 ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் 1/1894) 6-ஆம் பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவரஅட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 0.55.0ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்றுக் கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலம் ஒரு பொதுநோக்கத்திற்காக அதாவது திருப்பத்தூர் வட்டம் வடசிங்கம்புனாரி கிராம பிற்படுத்தப்பட்டோர் வகுப்பைச்சேர்ந்தவண்ணார்களுக்கு மனையிடத்திற்காக தேவைப்படுகிறது என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலத்தின் வரைபடம் தேவக்கோட்டை ஆதி திராவிடர் நல தனிவட்டாட்சியர் அலுவலகத்தில் வைக்கப் பட்டுள்ளன. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம்; பசும்பொன் முத்துராமலிங்கம்
வட்டம்:திருப்பத்நூர் கிராமம்:வடசிங்கம்புனரி

| நன்செய் அல்லது புன்செய் என்ற விவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக்காரரின் (பட்டாதாரரின் அல்லது) அனுபவதாரரின் பெயர் | கையகப் படுத்த உள்ள பரப்பு (ஹெக்டேர்) | தரிசா அல்லது பயிரிடத் தக்கதா? மரங்கள் கட்டிடம் கிணறு ஆகியவற்றை குறிப்பிடவும் |
|---|---|---|---|
| 600-3பிபுஞ்சை | 1. சின்னம்மாள் க-பெ முத்துராமன் (லேட்) 2. சின்னத்தம்பி த-பெ நல்லதம்பி 3. லெட்சுமி, க-பெ நல்லதம்பி | 0.55.0 | பயிரிடத் தக்கது |

சோ குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்
சமூக நலத் துறை

DIPR-28-PM-88-MAC

## சமூக நலத் துறை

அரசாணை(நிலை)எண்251
நாள் 1-3-1988

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடுஅரசு மன நிறைவடைந்திருப்பதோடு அந்நிலங்களுக்கு வழங்கப் வேண்டிய இழப்பீட்டுத்தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் அவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது. ஆகவே 1894ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச்சட்டம் 1-1894)6-ம்பிரிவின்படி தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிட்டுள்ளதும் 0.25.0 ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக அதாவது அண்டக்குடி கிராம ஆதி திராவிடர்கள் வீட்டுமனைக்கு தேவைப்படுகின்றன என்று இதன் மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் சிவகங்கை ஆதி திராவிடர் நல தனி வட்டாட்சியா அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமனாலும் பாாவையிடலாம்,

விவர அட்டவணை

மாவட்டம்: பசும்பொன் முத்துராமலிங்கம்
வட்டம்: இளையான்குடி
கிராமம்: அண்டக்குடி

| நன்செய் அல்லது புன்செய் என்ற விவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக் காரரின் (பட்டதாரரின் அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப்படுத்த உள்ள பரப்பளவு (ஹெக்டேர்) | தரிசா அல்லது பயிரிடத் தக்கதா? (மரங்கள், கட்டடம் கிணறுகள் ஆகியவற்றைக் குறிப்பிடவும் |
|---|---|---|---|
| புல எண், வகை புஞ்சை 70-16பி | கருப்பையா தேவன் மகன் முனியாண்டி தேவர் | ஹெக்டே 0.25.0 | தரிசாக உள்ளது மரங்கள் கட்டிடங்கள் கிணறு ஏதுமில்லை |

சோ. குமாரசுவாமி
அரசு துணைச்செயலாளர்

DIPR-29-PM-88MAC

## சமூக நலத்துறை

அரசாணை (நிலை) எண் 252
நாள் 1-3-88
நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் 6-ம் பிரிவின் கீழான

### அறிவிக்கை

கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள நிலங்களை ஒரு பொது நோக்கத்திற்காக கையகப்படுத்த வேண்டியுள்ளதென்று தமிழ்நாடு அரசு மனநிறைவடைந்திருப்பதோடு, அந்நிலங்களுக்கு வழங்கப்பட வேண்டிய இழப்பீட்டுத் தொகை முழுவதும் பொது வருவாய்களிலிருந்து செலுத்தப்பட வேண்டும் என்றும் இவ்வரசால் ஏற்கனவே முடிவெடுக்கப்பட்டுள்ளது ஆகவே, 1894-ஆம் ஆண்டைய நிலம் கையகப்படுத்துதல் சட்டத்தின் (மையச் சட்டம் (1-1894) 6-ஆம் பிரிவின்படி, தமிழ்நாடு ஆளுநர் அவர்கள் கீழ்க்காணும் விவர அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ளதும் 0.49.5 ஹெக்டேரைக் கொண்ட அதே அல்லது சற்று கூடுதலாகவோ குறைவாகவோ பரப்பளவு உள்ளதுமான நிலங்கள் ஒரு பொது நோக்கத்திற்காக, அதாவது பூவாம்பட்டி கிராமம் காக்காலக்காடு அருந்ததியர் வீட்டுமனைக்கு தேவைப்படுகின்றன என்று இதன்மூலம் அறிவிக்கிறார்.

இந்நிலங்களின் வரைபடங்கள் சங்ககிரி அதிதிராவிடர் நல தனி தாசில்தார் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ளன. அவற்றை அலுவலகப்பணி நேரத்தில் எப்போது வேண்டுமானாலும் பார்வையிடலாம்.

விவர அட்டவணை

மாவட்டம் சேலம் வட்டம் சங்ககிரி
கிராமம் 10, பூவாம்பட்டி

| நன்செய் (அல்லது) புன்செய் என்றவிவரிப்பும் புல எண்ணும் | நிலச் சொந்தக் காரரின் (பட்டாதாரரின்) அல்லது அனுபவதாரரின் பெயர் | கையகப் படுத்த உள்ள பரப்பளவு | தரிசா (அ) பயிரிடத்தக்கதா? (மரங்கள், கிணறுகள், கட்டடங்கள் ஆகியவற்றைக் குறிப்பிடவும்) |
|---|---|---|---|
| புஞ்சை 147-1-ஏ5 | கோபால் த-பெ விஸ்வநாராயண அய்யர் | 0,49.5 ஹெக்டேர் (அல்லது) 1. 23 ஏக்கர் | பயிரிடத்தக்கது. கிணறு கட்டிடம் மரம் இல்லை. |

சோ குமாரசுவாமி
அரசு துணைச் செயலாளர்
சமூக நலத்துறை

DIPR 57-SM-88-Chhaya

**வேலை கொடு-இல்லையேல் வெளியேறு!**
**மார்ச்-15 "பாரத் பந்த்" அணி திரள்வீர் ஆர்ப்பரிப்பீர்!**